SRI K. ANBAZHAGAN : திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்த எம்.எல்.ஏ., எம்.பி. முதலியவர்கள் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்படவில்லை என்றாலும் சாதாரண கைதிகளைப்போலக் கூட நடத்தப்படக்கூடாது, தண்ணீர்கூடக் கொடுக்கப்படக்கூடாது என்பதாக ஏதாவது உததரவு போடப்பட்டுள்ளதா ? சட்டம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அண்டர் ட்ரையல் கைதிகளுக்கும், தண்டிக்கப்பட்ட கைதிகளுக்கும் எந்த எந்த விதிப்படி தண்டனை அளிக்கப்படவேண்டும், அந்தஸ்துக்கு ஏற்றபடி எந்த எந்த வகுப்புகளில் வைக்கவேண்டும் என்பதற்கு விதி இருக்கிறது. ஆனால் க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151-வது பிரிவுப்படி கைது செய்யப்பட்டவர்களுக்கு அப்படிப்பட்ட விதி ஒன்றும் இல்லை. சாதாரண கைதிகளை விடக் கேவலமான முறையில் நடத்தப்பட்டார்கள் என்பதை நான் ஒத்துக்கொள்ளவில்லை. அதை ஒப்புக்கொள்ளவும் முடியாது.

SRI A. V. P. ASAITHAMBI : திராவிட முன்னேற்றக் கழக எம்.எல்.ஏ., எம்.பி., முதலியவர்களுக்கு எந்தவிதமான வசதியும் கொடுக்கப்படவில்லை. ஆனால் இப்பொழுது கைதி செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ முத்துராமலிங்க தேவருக்கு முதல் வகுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேமாதிரி இவர்களுக்கு ஏன் கொடுக்கவில்லை என்று சொல்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்ரீ முத்துராமலிங்க தேவர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைதி செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன என்ன வசதி கொடுக்கப்படவேண்டுமென்பதற்கு தனி விதி இருக்கிறது. க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151-வது செக்ஷன்படி கைது செய்யப்பட்டவர்களுக்கு அந்த விதி இல்லை.

SRI K. ANBAZHAGAN : செக்ஷன் 151-வது பிரிவுப்படி கைதி செய்யப்பட்டவர்கள் துண்டுகூடப் போட்டுக்கொள்ளக்கூடாது, குடிக்கத் தண்ணீர் கேட்டால்கூடக் கொடுக்கக்கூடாது என்பதாகச் சட்டம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒன்றும் உத்தரவு கிடையாது. உத்தரவு போடவில்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

*Woodbriar Estate, Nilgiris*

* 590 *Q.*—SRI N. MARUDACHALAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether Government have received any report that the Labour Union has given a strike notice as the management of Woodbriar Estate at Nilgiris has thrown out more than hundred labourers and doing the work on contract in contravention of the statutory agreement it made with the Labour Union before the Labour Officer; and

(*b*) if so, the action taken thereon by Government?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The dispute has been referred to the Industrial Tribunal, Madras, for adjudication.

SRI N. MARUDACHALAM : நீலகிரி எஸ்டேட் மானேஜ்மெண்டார் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களைத் தள்ளிவிட்டு கண்டிராக்ட் முறையில் வேலை நடத்திவருகிறார்கள். அந்தக் கண்டிராக்ட் முறையை அனுமதிக்காது,

7th April 1958]

வேலையிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களைத் திருப்பி வேலையில் வைத்து வேலைவாங்க அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தப் பிரச்னை கோர்ட்டுக்கு விடப்பட்டிருக்கிறது.

*Amount due to the Tanjore District Board from the Raliway Funds.*

* 591 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the District Board of Tanjore has received its due share of Railway Funds from the Central Government;

(*b*) if so, the amount received; and

(*c*) the person to whom this amount is being entrusted now as there is no district board at present?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir. Rs. 1,75,18,794 (Rupees one hundred seventy-five lakhs eighteen thousand seven hundred and ninety-four).

(*c*) The amount is held in deposit by the Government of Madras.

SRI A. V. P. ASAITHAMBI : இந்த ரயில்வே நிதி எதற்காக என்று அமைச்சர் அவர்கள் விளக்க முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சாவூர் ஜில்லாவில் அந்த ஜில்லா போர்டுக்குச் சொந்தமாக ரயில்வே கொஞ்சம் இருந்தது. அதன் நிர்வாகம் ரயில்வே போர்டால் நடத்தப்பட்டு வந்தபோது அதில் கொஞ்சம் விகிதாசாரம் அந்த ஜில்லா போர்டுக்காக ஒதுக்கப்பட்டது. தங்கள் உரிமையை ஜில்லா போர்டார் ரயில்வே போர்டினிடமே கொடுத்துவிட்டதால் ஆண்டுதோறும் அவர்களுக்கு கூடிவந்த தொகையை எல்லாம் கணக்குப் போட்டு இந்தத் தொகை கொடுக்கப்படுகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, how they propose to utilize this amount?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Now the Government which holds the amount in deposit proposes to pay 4 per cent interest to the District Board. There have been so many proposals to utilize the amount including the proposal to start a medical college in Tanjore. If the hon. the Leader of the Opposition would put a separate question to my Hon. Colleague the Minister for Local Administration, she might perhaps be able to answer that question in detail.

SRI A. VEDARATHNAM : இதற்கு முன்னிருந்த ஜில்லா போர்டார் அந்தத் தொகை பற்றி எந்த முறையில் செலவிடவேண்டும், எந்த எந்த இனத்திற்குச் செலவிடவேண்டுமென்று ஏதாவது தீர்மானம் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்களா ? அப்படியானால் அந்த விவரம் என்ன ? அதைப்பற்றி அரசாங்கம் என்ன முடிவு செய்திருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லா போர்டு சில யோசனைகளைச் சொல்லியிருக்கிறது. அதைப்பற்றிய விவரங்கள் என்னிடம் இல்லை.